# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 2 | ஏப்ரல் 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 2 | April 10th, 2020 | Annual Subscription Rs. 100/-



## இராணுவ ஆட்சி

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"இன்றைய சூழ்நிலையில் ஒரு நாடு இன்னொரு நாட்டுடன் போரிட்டு அந்த நாட்டை அடிமைப்படுத்துவது என்பது அநாகரிகமானதாகவும் சர்வதேச சட்டதிட்டங்களுக்கு விரோதமானதாகும் கருதப்படுகிறது.

போர் புரிவது சட்டவிரோதமானது என்ற நிலையில் போர்க் கருவிகளும் இராணுவமும் எதற்கு?

ஆகவே நாம் அனைவரும் புதிய சிந்தனைக்கும் புதிய கண்ணோட்டத்துக்கும் புதிய அணுகுமுறைக்கும் வந்தாக வேண்டிய கால கட்டத்துக்கு வந்து விட்டோம்.

போர் புரிய வேண்டுவது அநாகரீகமானது என்ற நிலையில் இராணுவத்துக்கு என்ன அவசியம்?

அதற்காக,

கோடி கோடியாகச் செலவு செய்து உருவாக்கிய இராணுவத்தைக் கலைத்து விட வேண்டுமா? போர் புரிவதற்காக உருவாக்கப்பட்ட இராணுவம் முழுவதையும் சிவில் இராணுவமாக மாற்றி ஆக்கப்பூர்வமான வேலைகள் அனைத்துக்கும் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்து, நம்முடைய தீர்வாக முன்வைக்கப் பட்டிருக்கிறது.

## பகவத் பாதை சந்தா விபரம்

### உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்ப வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Checque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/o. No. 1590762000005, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c. ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# இராணுவ ஆட்சி



- ஸ்ரீ பகவத்

"ஸ்ரீ பகவத் பாதை" என்ற பெயரில் தனிப்பட்ட நூல் ஒன்றை சமுதாய நலன் கருதி வெளியிட்டுள்ளோம்.

அந்த நூலுக்கு "பயங்கரவாதம் தேவை" என்ற பெயரைத் தேர்வு செய்திருந்தோம்.

அந்தப் பெயரில் அந்த நூலை வெளியிட்டால் அதன் உண்மையான பொருளைக் கூட புரிந்து கொள்ளாமல் அதன் 'பெயருக்காக' அந்த நூலைத் தடை செய்யும் வாய்ப்புள்ளது என அன்பர்கள் பலரும் கருத்து தெரிவித்திருந்தார்கள். எனவே அதன் பெயரை ஸ்ரீ பகவத் பாதை என குறிப்பிட்டு வெளியிட்டிருந்தோம்.

ரூபாய் 200/- அடக்க விலை உள்ள அந்த நூலைப் பலரிடமும் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற நோக்கில் நம் மீது அக்கறையும் நல்லெண்ணமும் கொண்ட 23 அன்பர்களிடம் நன்கொடை பெற்று அதனை வெளியிட்டோம்.

அந்த நூலைப் பலரிடமும் கொண்டு சேர்க்கும் Handling Charge ஆக மட்டும் ரூபாய் 50-ஐ நூலின் விலையாகப் பெறுவது எனவும் முடிவு செய்தோம்.

அதன்படி அந்நூல் பரிசில் விலையாக ரூ. 50 க்கு விநியோகம் செய்யப்பட்டு வருகிறது.

அந்த நூலைப் பற்றியும் அதில் குறிப்பிட்டிருந்த செய்தி பற்றியும் மீண்டும் சிந்தித்துப் பார்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளதால்

இந்தக் கட்டுரையை எழுதுவதில் ஆர்வம் ஏற்பட்டுள்ளது.

அந்த நூலின் மையக் கருத்தாக நாம் என்ன சொல்லி இருக்கிறோம்?

அது எந்த வகையில் இன்றைய சூழ்நிலையோடு தொடர்புடையதாக உள்ளது?

நாம் இன்றைய நிலையில் எவ்வாறு வாழ்ந்து வருகிறோம்?

கொரானா என்னும் தொற்று நோய் உலக அளவில் பரவி வருகிறது. அதற்கான சரியான மருந்து இன்று (26.3.2020) வரையிலும் கண்டுபிடிக்கப்படவில்லை.

அதைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் உலகத்து விஞ்ஞானிகள் அனைவரும் இரவு பகலாக பாடுபட்டு வருகின்றனர்.

அவர்களது முயற்சி முன்னேற்றகரமாக இருந்தாலுங்கூட இன்று வரை அவர்கள் வெற்றிக் கோட்டை எட்டவில்லை.

இந்நிலையில்...

தொற்றுநோய் பரவாமல் எவ்வாறு மக்களை பாதுகாப்பது?

ஒரு நாள் மட்டும் நாட்டு மக்கள் அனைவரையும் வீட்டுக்குள்ளேயே முடக்கி வைப்பது போல் முடக்கிப் போட்டு விட்டு அதன் பிறகு மொத்தமாக 21 நாட்களுக்கு மக்கள் அனைவரையும் வீட்டுக்குள்ளேயே முடக்கி போட்டு விட்டார்கள்.

வீட்டுக்குள்ளேயே உட்கார்ந்து நாம் என்ன செய்வது?

காவல்துறை அதிகாரி ஒருவர் இது குறித்து பேட்டி கொடுத்தார்.

"ஒவ்வொருவரும் வீட்டில் இருந்துகொண்டே நல்ல நூல்களைப் படிக்கலாம். புதிய மொழியைக் கற்றுக் கொள்ளலாம்."

தற்போதைய நிலையில் 21 நாட்கள் மட்டும் இந்த முடக்கம் அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்த முடக்க நிலை மேலும் நீடித்தால் என்ன ஆகும்?

அத்தியாவசியத் தேவைகளான பொருட்களின் உற்பத்திகூடக் குறைந்து விடும்.

நாம் அனைவரும் வீட்டை விட்டு வெளியே வராவிட்டால் நமக்கு தேவையானவற்றை உற்பத்தி செய்பவர்கள் யார்?

நம்முடைய அந்த நூலில் ஏறத்தாழ இத்தகையதொரு சூழ்நிலையைத்தான் விவாதத்திற்கு எடுத்திருந்தோம்.

அதற்கானதொரு பரிந்துரையாகத்தான் இராணுவ ஆட்சியை முன் வைத்திருந்தோம்.

இராணுவ ஆட்சி என்றால் பொதுவாக ஒருவருக்கு என்ன எண்ணத் தோன்றும்?

இராணுவத்தினர் அனைவருமாகச் சேர்ந்து துப்பாக்கி முனையில் மக்களைக் கட்டுப்படுத்தி முடக்கிப் போட்டு விடுவதாகவே எண்ணத் தோன்றும்.

ஆனால் நாம் அந்தப் பொருளில் இராணுவ ஆட்சியை விவரித்திருக்கவில்லை.

பின் எப்படி?

ஆக்கப்பூர்வமான பணிகள் அனைத்துக்கும் இராணுவத்தை பயன்படுத்த வேண்டும் என்ற பொருளில் அவ்வாறு நாம் குறிப்பிட்டிருந்தோம்.

ஆர்வமுள்ளவர்கள் அந்த நூலையும் ஒரு முறை படித்திட வேண்டுகிறேன்.

பண்டைய காலங்களில் ஒரு நாடு இன்னுமொரு நாட்டுடன் சண்டையிட்டு அதனைக் கைப்பற்றும் போக்கு இருந்தது.

இன்றைய சூழ்நிலையில் ஒரு நாடு இன்னொரு நாட்டுடன் போரிட்டு அந்த நாட்டை அடிமைப்படுத்துவது என்பது அநாகரிகமானதாகவும் சர்வதேச சட்டதிட்டங்களுக்கு விரோதமானதாகும் கருதப்படுகிறது.

போர் புரிவது சட்டவிரோதமானது என்ற நிலையில் போர்க் கருவிகளும் இராணுவமும் எதற்கு?

ஆகவே நாம் அனைவரும் புதிய சிந்தனைக்கும் புதிய கண்ணோட்டத்துக்கும் புதிய அணுகுமுறைக்கும் வந்தாக வேண்டிய கால கட்டத்துக்கு வந்து விட்டோம்.

போர் புரிய வேண்டுவது அநாகரீகமானது என்ற நிலையில் இராணுவத்துக்கு என்ன அவசியம்?

அதற்காக,

கோடி கோடியாகச் செலவு செய்து உருவாக்கிய இராணுவத்தைக் கலைத்து விட வேண்டுமா?

இதற்காக நாம் கொடுத்திருந்த மாற்றுச் சிந்தனைதான் அந்த நூலின் மையமாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

அந்த நூலின் மையக் கருத்தாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

போர் புரிவதற்காக உருவாக்கப்பட்ட இராணுவம் முழுவதையும் சிவில் இராணுவமாக மாற்றி

ஆக்கப்பூர்வமான வேலைகள் அனைத்துக்கும் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்து,

நம்முடைய தீர்வாக முன்வைக்கப் பட்டிருந்தது.

நாம் முன்வைத்திருந்த தீர்வைச் செயல்படுத்திக் காட்டுவது போன்றதொரு சூழ்நிலைதான் தற்போது ஓர் ஒத்திகையாக நடந்து வருகிறது.

இதனை எவருமே திட்டமிட்டிருக்கவில்லை. தற்செயலாகவே இத்தகையதொரு ஒத்திகை நிறைவேறி உள்ளது.

தற்காலிகமாகச் செயல்படுத்திக் கொண்டிருக்கும் இதனை

நாம் நிரந்தரமாகவே ஏற்படுத்திவிட வேண்டும் என்பதுதான் நமது அணுகுமுறை.

இப்போது என்ன சூழ்நிலை உருவாகியுள்ளது?

நாட்டு மக்கள் அனைவரும் அவரவர் வீட்டுக்குள் முடக்கி வைக்கப்பட்டுள்ளனர்.

மளிகைப் பொருள்கள் மற்றும் மருந்துகள் வாங்குவது தவிர வேறு எந்த காரணத்திற்காகவும் எவரும் வெளியே வரக்கூடாது

– என அனைவரும் அவரவர் வீட்டுக்குள் முடக்கி வைக்கப்பட்டுள்ளனர்.

இன்றைய நிலையில் நாம் அனைவரும் ஒரு மாத கால அளவுக்கு நம் வீட்டினுள் முடக்கி வைக்கப்பட்டுள்ளோம்.

நாம் எவரும் நம்முடைய அன்றாட அலுவல்களுக்குச் செல்ல முடியவில்லை. நம்முடைய தொழில்களையும் நிறுத்தி வைத்துள்ளோம்.

அரசுப் பணியில் அரசு ஊதியம் பெறுபவர்கள் மாதச் சம்பளம் பெறுவதில் சிக்கல் இருக்காது.

வருவாய் இல்லாத தனியார் நிறுவனங்களால் தங்களுடைய வேலை செய்யாத ஊழியர்களுக்கு மாதச் சம்பளம் வழங்க முடியுமா?

இந்நிலை நீடித்தால் –

தொழில்கள் என்ன ஆகும்?

வருவாய் என்ன ஆகும்?

சேமிப்புகள் என்ன ஆகும்?

அன்றாட வாழ்வு என்னாகும்?

அனைத்துமே கேள்விக்குறியாகிவிடும்.

நம்முடைய அத்தியாவசியத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் ஆகிய அனைத்துமே கேள்விக்குறியாகிவிடும்.

இவற்றையெல்லாம் ஈடு செய்வது எவ்வாறு?

போர் புரிய வேண்டிய வேலை இராணுவத்துக்கு இல்லாத போது,

அவர்களுக்கு என்னதான் வேலை?

உற்பத்தித்துறையில் அவர்கள் அடி எடுத்து வைத்தால் என்ன ஆகும்?

இரும்பையே இலவம் பஞ்சாக்கும் ஆற்றல் கொண்டவர்கள் அவர்கள்.

உலகையே சொர்க்கமாக்கிவிடுவார்கள் அவர்கள்.

வாய்ப்பு கிடைக்காத அவர்கள் வாய்மூடி நடைப்பயிற்சி மட்டும் பழகி வருகிறார்கள்.

அவர்கள் களத்தில் இறங்கினால் –

அதுதான் இராணுவ ஆட்சி.

நாம் திருவண்ணாமலையில் நிகழ்ச்சிகளை நடத்திவரும் காலத்தில் ஒருமுறை வெளிநாட்டு அன்பர்கள் சிலருடன் இந்தக் கருத்தை விவரிக்க நேர்ந்தது.

அப்போது இஸ்ரேலைச் சேர்ந்த லெனிர் என்னும் அன்பர் "இதே கருத்து பைபிளிலும் விவரிக்கப்பட்டிருக்கிறது" என்று கூறி அந்தப் பகுதியைப் படித்துக் காட்டி ஆச்சரியமூட்டினார்.

அந்தப் பைபிள் வசனங்கள் இவ்வாறு காணப்பட்டன.

ஏசையா அத்–2

1._____

2._____

3._____

4. அவர்கள் தங்களுடைய வாட்களையெல்லாம் உழவுக் கருவிகளாகவும் ஈட்டிகளையெல்லாம் அறுவடைக் கருவிகளாகவும் மாற்றிக் கொள்வார்கள். எந்த ஒரு நாடும் பிற நாட்டுக்கு எதிராக வாளை உயர்த்தாது. இனி அவர்கள் ஒருபோதும் போர் செய்வதை கற்றுக் கொள்ள மாட்டார்கள்.

– இந்த பைபிள் வசனம் உண்மையிலேயே ஒரு தீர்க்கதரிசனமாக தான் அமைந்திருக்கிறது.

இன்றைய சூழ்நிலையில் இது நடைமுறைச் சாத்தியமானதும் கூட.

நமது கருத்தை ஒத்திகை பார்ப்பது போலவே அனைத்து நாடுகளும் முடங்கிக் கிடக்கின்றன.

உழைப்பு அனைத்தையும் இராணுவமே கையில் எடுக்கும் ஒரேயொரு பணி மட்டுமே பாக்கியாக உள்ளது.

நாம் அனைவரும் புரிந்து கொண்டால்,

பாக்கியாக இருக்கும் அந்தப் பணியும் பூர்த்தியாகிவிடும்.

இதுவே கொரானா நமக்கு வழங்கிய கொரானா மெஸேஜ்.

இந்த மெசேஜ் மூலம் நாம் என்ன புரிந்து கொண்டோம்?

★

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## பிள்ளைகளுக்கு சுதந்திரம் கொடுத்து வளர்ப்பது சரியா? தவறா?

**கேள்வி :** என் மகள் கல்லூரி முடித்து வேலைக்குச் சென்று கொண்டிருக்கிறாள். நான் அவளுக்கு முழு சுதந்திரம் கொடுத்திருக்கின்றேன். நாங்கள் இருவரும் நண்பர்களைப் போல எல்லா விஷயங்களையும் பேசிக் கொள்ளும் வகையில் நட்புடன் பழகி வருகிறோம். நான் இப்படி நடந்து கொள்வது சரியா? தவறா? என்று கூட சில நேரங்களில் எனக்கு யோசனைகள் தோன்றுகின்றது? எனது மகள் முழு உரிமையை எடுத்துக்கொண்டு உறவினர்களுக்கு முன்னிலையில் சில நேரங்களில் அம்மா என்று கூடபார்க்காமல் என் மீது கடுமையான கோபத்தையும் அப்படியே காட்டி விடுகிறாள். இதனால் உறவினர்கள் "மகளை இப்படி வளர்த்து இருக்கிறாயே" என்று என்னையும் எனது மகளையும் சேர்த்து திட்டுகிறார்கள். இது எனக்கு மிகுந்த மனவேதனையைத் தருகிறது.

நான் அவளுக்கு சுதந்திரம் கொடுத்து வளர்த்தது தவறா? கண்டிப்புடன் நடந்து கொள்ள வேண்டுமா?

என்னைத் தவிர மற்றவர்களிடமும் வேலை பார்க்கும் இடத்திலும், எல்லோரிடமும் சரியாகத்தான் நடந்து கொள்கிறாள். நான் என்னுடைய அணுகுமுறையை மாற்றிக்கொள்ள வேண்டுமா? எனது மகளை எப்படி பொறுப்புடன் வளர்ப்பது?

**பதில் :** உங்களது மகன், மகள் சிறு பிள்ளைகளாக இருக்கும் வரை அவர்களுக்கு அம்மாவின் அரவணைப்பும் கண்டிப்பும் அவசியம் தேவை.

பருவம் எய்திய பிறகு, தோளுக்கு மேல் வளர்ந்த விட்ட நிலையில் உங்களது மகன் அல்லது மகளை தோழன், தோழியாக மாற்றிக்கொண்டு நட்புடன் பழகுவதே சிறந்த அணுகு முறை ஆகும்.

நாம் நம் பிள்ளைகளுடன் நட்புடன் பழகும் போது மட்டுமே அவர்கள் முழு சுதந்திரமாக தாங்கள் எதிர் கொள்ளக் கூடிய பிரச்சினைகளை அப்படியே நம்மிடம் பகிர்ந்து கொள்வார்கள். சுதந்திரம் கொடுத்து வளர்ப்பதே சரியான வளர்ப்பு முறையாகும்.

உண்மையான அன்பு என்பது ஒருவர் நம்மிடம் சுதந்திரமாக நடந்துகொள்ள இடம் அளிப்பதே ஆகும். அப்போதுதான் அவர்கள் எந்த தயக்கமும் இன்றி ஒளிவு மறைவின்றி தான் எதிர்கொள்ளும் பிரச்சினையை அப்படியே நம்மிடம் பகிர்ந்து கொள்வார்கள்.

பிள்ளைகள் வளர்ந்துவிட்ட நிலையில் அவர்களுக்கு அம்மா-மகள் என்ற அணுகுமுறையை விட நண்பர்கள் என்ற அணுகுமுறையே சிறந்தது.

இப்படி நீங்கள் சுதந்திரம் கொடுத்ததினால் அவர்கள் உங்கள் மீது கோபத்தை காட்டலாம். வெறுப்புடன் நடந்து கொள்ளலாம் . வேண்டாத சில வார்த்தைகளைக்கூட சொல்லி திட்டலாம். இவை அனைத்திற்கும் காரணம் நீங்கள் கொடுத்திருக்கும் முழுமையான சுதந்திரம் மட்டுமே.

அவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளால் ஏற்படும் மன உணர்வுகளை அப்படியே உங்களிடம் காட்டுவார்கள். அந்த உணர்வு மகிழ்ச்சியாகவும் இருக்கலாம் அல்லது வெறுப்பாகவும் இருக்கலாம்.

சுதந்திரம் உள்ள இடத்தில் எந்த முகத்திரையும் போட்டுக் கொள்ள வேண்டிய அவசியம் அவர்களுக்கு இல்லை. அவர்களுக்கு வேறு எந்த வழியும் தெரியாததால் மட்டுமே உங்களையே திரும்பத் திரும்ப நாடி வருகிறார்கள்.

நீங்களும் அவர்களை புறக்கணித்து விட்டால் சரியில்லாத யாரோ ஒருவருடன் நட்பு ஏற்பட்டு அதனால் பல பிரச்சினைகளை நாம் சந்திக்க வேண்டியது ஏற்பட்டுவிடும். உங்களை காட்டிலும் அவர்கள் மீது அன்பும் அக்கறையும் உடையவர்கள் வேறு யாராக இருக்க முடியும். உறவினர்கள் குறை கூறுவதைக் கூட நீங்கள் இரண்டாம்பட்சமாக எடுத்துக் கொள்ளுங்கள். உறவினர்கள் முன்னிலையில் உங்கள் மகள் அவ்வாறு பேசுவதை தவிர்க்க வேண்டுமெனில் உங்கள் மகளை தனிமையில் அழைத்து "நீ என்னிடம் எவ்வளவு கோபமாக வேண்டுமானாலும் நடந்துகொள். அதனால் எனக்கு எந்த வருத்தமும் இல்லை. ஆனால் உறவினர்கள்

முன்னிலையில் என்னிடம் கோபமாக நடந்து கொள்ளும் போது மட்டும் கொஞ்சம் நிதானத்தைக் கடைபிடிக்க வேண்டும். இதுவும்கூட நம்மைப் பற்றி அவர்கள் குறை கூறாமல் இருப்பதற்காகதான். அதனால் உறவினர்கள் முன்னிலையில் நீ கொஞ்சம் கவனத்துடன் நடந்து கொள்வது உனக்கும் சரி எனக்கும் சரி மிகவும் நல்லது." என்பதை அமைதியுடன் கூறுங்கள்.

அவர்கள் மீதான உங்களுடைய அன்பின் நிலைப்பாட்டை புரியவையுங்கள்.

உங்களிடம் உங்கள் மகள் சுதந்திரமாக நடந்துகொள்வதைப்போல் மற்றவர்களிடம் நடந்துகொள்ள முடியாது. காரணம் மற்றவர்கள் உங்களைப்போல் உங்கள் மகளின் பிரச்சினையை காது கொடுத்து கேட்பதில்லை, அக்கறையும் காட்ட மாட்டார்கள். ஆதலால் மற்றவர்களை உங்கள் மகள் புறக்கணித்துவிட்டு முழு சுதந்திரம் இருக்கும் உங்களிடம் மட்டுமே தான் எதிர்கொள்ளும் அனைத்து விஷயங்களையும் கொட்டித் தீர்ப்பாள்.

மகள் உங்களை திட்டுவதாக இருந்தாலும் சரி, கோபமாக நடந்து கொள்வதாக இருந்தாலும் சரி இவை அனைத்தையுமே நீங்கள் சரி என்றே எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களை விட வயதிலும் மனதைப் பற்றிய தெளிவிலும் உயர்ந்தவர்கள் நீங்களே. உங்களையும் மீறி சில நேரங்களில் உங்களுக்கு அவர்கள் மீது கோபம் ஏற்பட்டால் ஏற்பட்டு விட்டு போகட்டும். மற்றபடி நீங்கள் நிதானத்திற்கு வந்த பிறகு மீண்டும் பழையபடி அவர்களுக்கு முழு சுதந்திரம் அளிப்பது ஒன்று மட்டுமே அவர்களுக்கான சரியான தீர்வாகவும் அமையும்.

கொஞ்சம் காலங்களில் அவர்களுக்கு புறத்தில் ஏற்படும் பல்வேறு தோல்விகளில் உங்களிடம் இருந்து கிடைக்கும் மனஆறுதல் மூலம் அவர்கள் நிச்சயமாக உங்களை புரிந்து கொள்வார்கள். நீங்கள் எந்த அளவிற்கு ஓர் உயர்ந்த மனநிலையுடன் செயல்பட்டு வந்திருக்கிறீர்கள் என்பதையும் உணர்ந்துகொள்வார்கள். உங்களையே தம்முடைய வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டியாக எடுத்துக் கொள்வார்கள்.

கண்டிப்புடன் நாம் வளர்க்கும் அணுகுமுறை நிச்சயமாக அவரிடம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. மகளுக்கும் உங்களுக்குமான இடைவெளியைத்தான் அதிகப்படுத்தும். அவர்களாக புரிந்து, உணர்ந்துகொண்டு எப்பொழுது தங்கள் செயல்களை மாற்றிக் கொள்கிறார்களோ அப்போதுதான் மாற்றம் என்பது நிச்சயமாக நிகழ முடியும். அவர்களாக உணர்ந்து மாற்றம் அடைவது ஒன்று மட்டுமே மாற்றம். அதற்கான இடம் அளியுங்கள்.

மனதின் இயக்கத்தை புரிந்து கொண்ட நீங்கள், மனதின் இயக்கத்தை புரிந்துகொள்ளாத உங்கள் வளர்ந்துவிட்ட பிள்ளைகளிடம் தோழமையான இந்த அணுகுமுறையை பயன்படுத்தி உதவுங்கள். அதுவே உயர்ந்த அணுகுமுறையாகும்.

ஒரு நடைமுறை உதாரணத்தை சிந்திப்போம்.

எனது மகன்கள் கார் ஓட்டுவதில் மிகுந்த ஆர்வத்துடன் இருந்து வருகிறார்கள். நாம் அவர்களுக்கு இந்த வயதில் கார் ஓட்ட கொடுப்பது மிகவும் ஆபத்து என்று எண்ணி கார் ஓட்ட கொடுப்பதை தவிர்த்து வருகிறோம். அதனால் கார் கிடைக்கும் சூழ்நிலையில் அவர்களிடம் அவசரமும் ஆர்வமிகுதியால் நிதானமின்மையும் மட்டுமே மேலோங்கி இருக்கிறது. அதனாலேயே பல பிரச்சினைகளையும் விபத்துகளையும் சந்திக்க நேரிடுகிறது. வாகனம் ஓட்டும் உரிமை பெற்ற பிறகு நம்முடைய ஏதாவது ஒரு வேலைக்கு செல்லும் போதெல்லாம் மற்றும் நமது ஓய்வு நேரங்களிலும் அவர்களையும் நம்உடன் அழைத்துச் சென்று நாமாகவே அவர்களுக்கு காரை ஓட்ட கற்று கொடுக்கலாம். நாமாக கற்றுக்கொடுக்கும்போது காரின் வேகம் 40 முதல் 50 வேகத்திற்கு மிகாமல் ஓட்டச் சொல்லி அருகாமையில் அமர்ந்து கொண்டு பொறுப்புடனும் நிதானத்துடனும் கவனித்து கற்றுக் கொடுக்கலாம். அப்பொழுது அவர்களும் நன்றாகவே கார் ஓட்ட பழகிக் கொள்வார்கள். கார் ஓட்ட வேண்டும் என்ற அவர்களின் அதீத வேட்பு சமநிலைபடும். நமக்கு வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் இவ்வாறு அவர்களுக்கு ஆர்வம் இருக்கும் விசயத்தில் நாம் உதவிடும்போது நம்மீது அவர்களுக்கும் அவர்களின் மீது நமக்கும் ஒரு நெருங்கிய நட்பு உருவாகிவிடும். பிறகு காலப்போக்கில் அவர்கள் கார் டிரைவிங் மீது நமக்கு நம்பிக்கையுமே ஏற்பட்டுவிடும் . இது நடைமுறையில் நாம் கண்ட உண்மை.

நீங்கள் உங்கள் மகளிடம் கண்டிப்புடன் பழகுவதை விட இப்படி நண்பர்களாக பழகும் அணுகுமுறையே மிகவும் சிறந்தது.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

மனம் என்பது மாயை. மனம் மாயையாக இருந்தாலும் இந்த வாழ்க்கையை புரிந்து கொண்டு வாழ நம் கைவசம் இருக்கும் ஒரே சாதனம் மனம் மட்டுமே.

மனதின் இயக்கத்தைப் புரிந்து கொள்வது மட்டுமே நமக்கு மாயையிலிருந்து விடுதலையைக் கொடுக்கும்.

நாம் வாழ்க்கையில் எதிர்கொள்ளும் நிகழ்வுகள் அனைத்தும் வெறும் நிகழ்வுகளே. அதை மனம் எடுத்துக் கொள்ளும் விதத்தில்தான் நமக்கு ஏற்படும் உணர்வுகளும் அதற்குத் தகுந்த நமது செயல்களும் அமைந்துவிடுகின்றன.

தற்போதைய சூழலில் கொரானா வைரஸ் பாதிப்பு பற்றி பலரும் பல விதமான தகவல்களை கொடுத்து வருகின்றனர்.

அவை அனைத்தும் சரியான தகவல்களா? தவறான தகவல்களா? என்பது நமக்கு தெரியாது. நாம் பாதுகாப்பாக இருப்பதற்கு தேவையான அளவு அதனை ஓர் எச்சரிக்கையாக மட்டும் எடுத்துக்கொண்டு மேலும் அதனை ஆராயாமல் 'நமக்கு அது பற்றி எதுவும் தெரியாது' என்று முடித்துக் கொள்வதே சரி.

நாம் புறச் செயல்கள் அனைத்தையும் அறிவைக் கொண்டு தான் செய்கிறோம்.

நமது செயல்களுக்கு பயன்படும் அறிவு, மனதை நிர்வகிக்க முயற்சி செய்யும் போது பிரச்சனையைக் கொண்டு வந்துவிடுகிறது.

அறிவே ஓரிடத்தில் பயன்பாடாகவும் ஓரிடத்தில் பிரச்சினையாகவும் இருக்கிறது.

புற நிகழ்வுகள் நமக்கு கட்டுப்பட்டதுமல்ல. புற நிகழ்வுகள் அனைத்தையும் நம்மால் புரிந்து கொள்ளவும் முடியாது. நம் கைவசம் இருப்பது நமது செயல் மட்டுமே. நம் அறிவுக்குத் தெரிந்த அளவு நமது புறச் செயல்களில் கவனமாக இருப்பது மட்டுமே நம்மால் முடியும்.

அனைத்தையும் அறிந்து கொள்வது என்பது இயலாத காரியம்.

தேடும் அறிவுக்கு விடை கிடைக்காத போது குழப்பம் ஏற்பட்டு தேங்கிவிடும்.

நமக்குத் தெரியாததை 'தெரியாது' என முடித்துக் கொண்டு அந்நிகழ்வை அப்படியே ஏற்றுக்கொள்ளும் போது அவற்றையும் கடந்து சுதந்திரம் அடைந்து விடுகிறோம்.

மனதின் இயக்கத்தை புரிந்து கொண்டவர்களால் மட்டுமே எந்த ஓர் இக்கட்டான சூழ்நிலைகளையும் தீரத்துடன் எதிர்கொண்டு அகத்தில் விடுதலையோடு வாழ முடியும்.

அகத்தை பொறுத்தவரை புரிந்து கொள்வதோடு நமது வேலை நிறைவடைந்து விட்டது. புறத்தைப் பொறுத்தவரை ஒவ்வொரு நாளும் கற்றுக் கொண்டுதான் இருக்கிறோம்.

**மேலும் தமிழக அரசின் அறிவிப்பின்படி கொரானா வைரஸிலிருந்து தற்காப்பிற்காக நாம் ஏற்கனவே அறிவித்திருந்த ஏப்ரல் ஐந்தாம் தேதி சென்னையில் நடக்க இருந்த ஒரு நாள் ஞான முகாமும் ஏப்ரல் 30ஆம் தேதி முதல் மே 3ஆம் தேதி வரை சேலம் ஏற்காட்டில் நடைபெற இருந்த நான்கு நாள் ஞான முகாமும் ஒத்திவைக்கப்பட்டுள்ளது.**

அடுத்து நடைபெற இருக்கின்ற ஞான முகாம்கள் பற்றிய விவரம் அடுத்த இதழில் அறிவிக்கப்படும்.

மேலும் நமது சேலம் ஸ்ரீ பகவத் பவன் வர விரும்புபவர்கள் கூட தற்போது வருவதைத் தவிர்த்து, தமிழக அரசின் ஊரடங்கு உத்தரவைத் தளர்த்திய பின் வருமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

அகத்தில் விடுதலையோடும் புறத்தில் விழிப்புணர்வோடும் இருப்போமாக...

# சென்னை ஸ்ரீபகவத் பவன்


– ஸ்ரீ பகவத்

அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

சென்னையில் ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்காக நாம் ஏற்கெனவே முயற்சி எடுத்திருந்தோம். அது சில தவிர்க்க முடியாத காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் அதற்கான ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

சென்னையில் அமைய விருக்கின்ற ஸ்ரீபகவத் பவன் நமது அய்யாவின் இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடிச் செல்ல ஏற்றவகையில் நமக்கான பகவத் பவன் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

இதனை நாம் கட்டுவதற்குப் பதிலாக புதியதாக கட்டி முடிக்கப்பட்ட இல்லமாக வாங்க முடிவெடுத்து இருக்கிறோம்.

இதனை வாங்குவதற்கு நமக்குத் தேவைப்படும் தொகையை நிறுவனர் (Founder) நன்கொடையின் மூலம் பெறலாம் என முடிவெடுத்துள்ளோம்.

முன்பே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டிடத்திற்கான நிதி வழங்கியவர்களின் நிதியும் இந்த வகைக்கு பயன்படுத்தப்படும்.

ஏற்கெனவே நிதி வழங்கிய இவர்களுக்கு நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சென்னை ஸ்ரீபகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

பங்களிப்புத் தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல.

பங்களிக்கும் உள்ளமே முக்கியம்.

எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக் கொள்கிறோம்.

வாருங்கள் ஒன்றிணைவோம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.

## ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்

சென்னையிலிருந்து சேலம் செல்லும் பைபாஸ் சாலையில், மின்னாம்பள்ளி அருகில், மகேந்திரா இன்ஜினியரிங் காலேஜ்க்கு எதிரில், சின்ன கவுண்டா புரம் பிரிவு ரோட்டில் நமது **ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்** அமைந்துள்ளது.

இங்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் ஆடியோ வீடியோ குறுந்தகடுகள் (CD) கிடைக்கும். நமது அன்பர்கள் இதனைப் பயன்படுத்திக்கொள்வதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அவர்களும் வாங்கி பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**ஸ்ரீபகவத் மிஷன்,** சேலம்.

# நிகழ்ச்சி நிழல்கள்








ஸ்ரீ பகவத் காட்டேஜ் கட்டடப் பணியில்...

# ஸ்ரீ பகவத் குடில்கள்





அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 32 அறைகளை கட்ட, அதாவது 8 அறைகளை கொண்ட நான்கு கட்டடங்களை கட்ட முடிவு செய்துள்ளோம்.

மேலும் ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் நன்கொடையாக ஒரு குடிலுக்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்திருந்தோம். அந்த வகையில் முதற்கட்டமாக 8 உறுப்பினர்கள் சேர்ந்துள்ளதால் 8 அறைகளை கொண்ட முதல் கட்டட வேலை மிகச் சிறப்பாகவும் விரைவாகவும் நடைபெற்றுக் கொண்டு வருகிறது.

இக் கட்டடம் கட்டுவதற்கு நாம் தரமான பொருட்களை பயன்படுத்துவதால் கட்டடத்திற்கு ஆகும் செலவுகள் பொறியாளரின் செலவு மதிப்பீட்டை (Expense Estimate) விட அதிக அளவில் செலவாகிக் கொண்டிருக்கிறது. ஆதலால் இந்த 8 குடில்களுக்குப் பிறகு அடுத்ததாக அமையவிருக்கின்ற குடில்களுக்கு உறுப்பினர் நன்கொடையை ரூபாய் 7லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

தற்போது நடந்து கொண்டிருக்கின்ற கட்டடப் பணி இன்னும் ஐந்து மாதத்திற்குள் நிறைவடைந்து விடும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

உறுப்பினராக இணைவதற்கு ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**



# ஜென் கதை

## "தெரிந்துகொள்வதா ? ஏற்றுக்கொள்வதா ?"

குரு ஒருவர் தமது மூன்று சீடர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு சீடன் கேட்டான் "குருவே இயற்கையின் இரகசியங்களை முழுமையாக நம்மால் அறிந்துகொள்ள முடியுமா?" என்று.

"இயற்கை மிகவும் புதிரானது. இதை முழுவதும் மனித அறிவால் அறிய ஒண்ணாதது. அதை அப்படியே ஏற்றுக் கொள்வதுதான்; அப்படியே ஒன்றுவது தான் இயற்கையோடு இருப்பதாகும். நமது பார்வையில் இயற்க்கையின் செயல்பாட்டில் ஓரிடத்தில் சரி எனப்படுவது, இன்னோரிடத்தில் தவறாகிவிடுகிறது. ஒன்றின் விஷம் இன்னொன்றின் அமுதம் ஆகிறது. இதன் பாதை சூட்சுமமானது. நம்மால் விளங்கிக்கொள்ள முடியாது. இயற்கையை முழுவதும் புரிந்துகொள்ள முடியாது. அதை அப்படியே இயற்கை என்று எடுத்துக் கொள்வதே அதனையும் கடந்து போவதற்கு வழி" என்றார்.

சீடர்களுக்கு அவர் சொன்னது புரியவில்லை. முகத்தில் தென்பட்ட ஏமாற்றத்தை கண்ட குரு "வாருங்கள் நாம் புஷ்பக விமானத்தில் போகலாம். வழியில் இயற்கையை ரசித்தபடி செல்வோம். அப்படியே அவைப் பற்றியும் பேசுவோம். ஆனால் ஒரு நிபந்தனை. இந்த விமானம் தவறாக பதில் சொல்பவரை வெளியே தள்ளி விட்டு விடும்". என்றார்.

மூன்று சீடர்களும் அதற்கு சம்மதித்து குருவுடன் விமானத்தில் ஏறி பறந்தனர்.

ஒரு காட்டுக்கு நேராக விமானம் தாழ்வாக பறந்து அந்தரத்தில் நின்றது. அங்கு அந்தக் காட்டின் ஒரு மூலையில் புலி ஒன்று குட்டிகளை பிரசவித்தது. காட்டின் மற்றொருபுறம் மான் ஒன்று குட்டிகளை போட்டது. பிரசவ அலுப்பில் இருந்து மீள அந்தமான் புதரை விட்டு வெளியே வந்தது. அங்கிருந்த புற்களை மெதுவாக மேய ஆரம்பித்தது. அதேபோன்ற பிரசவ அலுப்புடன் வெளியே வந்த புலி மானை கண்டது. பசியுடன் ஒரே பாய்ச்சலாக பாய்ந்து அதைக் கொன்று தின்றது.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சீடர்களைப் பார்த்து குரு கேட்டார், "இது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று.

"இது அநியாயம். குட்டி போட்ட மானைக் கொன்று விட்டால் அந்த குட்டிகளின் கதி என்ன ஆவது?" என்றான் ஒரு சீடன். மறுகணமே அந்த விமானம் அந்த சீடனை கீழே தள்ளியது.

"புலிகளின் உணவு மான். மானின் உணவு புற்கள். அந்தமான் குட்டிபோட்டதா? போடாததா? என்பதெல்லாம் இங்கு பிரச்சினையே இல்லை. புலிக்கான உணவு மான். ஆதலால் அதன்படி இது நியாயம் தான்" என்றான் அடுத்த சீடன். மறுகணம் அவனையும் அந்த விமானம் கீழே தள்ளியது.

மூன்றாவது சீடன் சொன்னான், "ஐயா எனக்கு ஒன்றும் புரியவில்லை. இது சரியா? தவறா? என்று எனக்கு எதுவும் புலப்படவில்லை. இதுபற்றி எனக்கு எதுவும் தெரியாது." என்றான்.

விமானம் இப்போது ஒரே சீராகச் சென்று கொண்டிருந்தது.

இயற்கை எப்போது தோன்றியது, அது பற்றி நமக்குத் தெரியாது. ஏனெனில் அது எங்கும் இருப்பது, அதனை விளங்கிக் கொள்ள நமது சிற்றறிவால் இயலாது. அதன் செயல்களும் மாபெரும் வலைப் பின்னலாக ஒன்றோடொன்று இணைந்து காணப்படுகின்றன. ஆற்றின் போக்கிலே நீந்துவதை போல் அதனோடு இணைந்து செல்வது மட்டுமே நமக்கான வழி.

அதைப் பற்றி ஆராய்வதை விட்டுவிட்டு அது இயற்கை என்று எடுத்துக் கொள்வதே இயற்கையோடு இணைந்து செல்வதாகும்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555